18th August 1960]

MR. SPEAKER : The question is—

"That leave be granted for the introduction of The Madras State Aid to Industries (Amendment) Bill, 1960".

The motion was put and carried and leave was granted.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced.

(2) THE INDIAN PENAL CODE AND THE CODE OF CRIMINAL PROCEDURE (MADRAS AMENDMENT) BILL, 1960 (L.A. BILL NO. 7 OF 1960).

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I beg to move—

That the Indian Penal Code and the Code of Criminal Procedure (Madras Amendmemnt) Bill 1960 (L.A. Bill No. 7 of 1960) as amended by the Joint Select Committee, be taken into consideration".

MR. SPEAKER : The motion moved—

"That the Indian Penal Code and the Code of Criminal Procedure (Madras Amendment) Bill, 1960 (L.A. Bill No. 7 of 1960) as amended by the Joint Select Committee, be taken into consideration."

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா ஏற்கனவே இந்தச் சபையில் விவாதிக்கப்பட்டு, இரண்டு சபைகளின் அங்கத்தினர்களும் கொண்ட ஒரு கமிட்டியால் பரிசீலிக்கப்பட்டு, மறுபடியும் இந்தச் சபையின் முன் அவைகளைப்பற்றி கவனித்துத் தீர்மானிப்பதற்கு வந்திருக்கிறது. இந்த மசோதாவை அநேகமாக எல்லோரும் வரவேற்றிருக்கிறார்கள். ஜாயின்ட் செலெக்ட் கமிட்டியிலும் இதைப்பற்றி பரிசீலித்து ஏகமனதாக ரிப்போர்ட் தயார் செய்து இங்கே அனுப்பப்பப்பட்டிருக்கிறது. ஜாயின்ட் செலெக்ட் கமிட்டியில் முக்கியமாகச் சில திருத்தங்கள் செய்திருக்கிறார்கள். அதில் ஒரு முக்கியமான திருத்தம், அதில் மூன்று மாதம் என்று இருக்கக்கூடியதை இரண்டு வருஷ அளவுக்கு தண்டனையை உயர்த்தியிருக்கிறார்கள். இரண்டு வருஷங்களுக்கு தண்டனை கொடுக்கலாம் என்று சட்டம் இருந்தாலும்கூட ஒரு தடவை குற்றம் செய்த பிறகும்கூட தொடர்ந்து அந்தக் குற்றங்களைச் செய்கிறவர்களுக்கு குறைந்தபட்சம் அதிக தண்டனை விதிக்க வேண்டுமென்கிற கருத்தை எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய முறையில் இந்த இரண்டாவது விதி மாற்றப்பட்டிருக்கிறது. அதாவது— 10-00 a.m.

"shall be punished with imprisonment of either description for a term which may extend to two years or with fine or with both :

Provided that for a second or any subsequent offence under this section, he shall be punished with imprisonment of either description for a term which shall not be less than six months and not more than two years and with fine."

[Sri C. Subramaniam] [18th August 1960

இது ஒரு முக்கியமான மாறுதல். இப்படிப்பட்ட ஒரு மாறுதல் செய்யப்பட்டிருக்கிறது. அதேமாதிரி அதற்கு அடுத்து இருக்கும் விதியில் இதே மாதிரி இரண்டாவது தடவை குற்றத்தைச் செய்தால் அவருக்குக் குறைந்த பட்சம் ஆறு மாதங்களாவது தண்டனை கொடுக்கவேண்டும் என்று விதியில் அமைக்கப் பட்டிருக்கிறது. மூன்றாவது,

"Provided that for a second or any subsequent offence under this section, he shall be punished with imprisonment of either description for a term which shall not be less than six months and not more than two years and with fine."

அதே மாதிரி போட்ட பிறகு முக்கியமான மாறுதல் ஒன்றும் செய்யப்பட்டிருக்கிறது. அதே மாதிரி பேச்சுப் பேசுவதிலும், எழுதுவதிலும், யாரைப்பற்றி பேசினாலும், எழுதினாலும், எந்த விதமாகப் பேசினாலும், எழுதினாலும் அது ஒரு குற்றமாக ஏற்பட்டு விடக்கூடாது; முக்கியமாக, பொது விஷயங்களில் ஈடு பட்டிருக்கிறவர்களும், அரசியலில் ஈடுபட்டிருக்கிறவர்களும் அவர்கள் மீது ஏதாவது குறைகள் இருந்தால் அதை எடுத்துக் காண்பிப்பதற்கும் அவசியம் இருக்கலாம். அப்படி பொது வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறவர்களும், அரசியலில் ஈடுபட் டிருப்பவர்களுக்கும் ஒரு பாதுகாப்பு இருக்கவேண்டும் என்ற அடிப்படையில் கமிட்டி கருதியதால் அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் முறையில் விதி அமைக்கப்பட்டு அவர்களுக்கும் பாது காப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த வகையில் அந்த விதியை முடிவு செய்திருக்கிறார்கள்.

"Provided, that it is not scurrilous to express in good faith anything whatever respecting the conduct of—

(i) a public servant in the discharge of his public functions or respecting his character so far as his character appears in that conduct and no further; or

(ii) any person touching any public question, and respecting his character, so far as his character appears in that conduct and no further."

பொது விஷயங்களை மக்களுக்கு எடுத்துச் சொல்வதிலும் ஜன நாயக அடிப்படையில், நமக்கு இருக்கக்கூடிய ஜனநாயக அமைப்பின் காரணமாக பல விஷயங்களை எடுத்துச்சொல்ல வேண்டியதாக இருக்கலாம். அதற்கு அவசியம் இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. அம்மாதிரி எடுத்துச் சொல்லும்போது குறை களையும் எடுத்துச் சொல்ல வேண்டியதாக இருக்கலாம். அப்படி எடுத்துச் சொல்லும்போது அது குற்றமாகி விடக்கூடாது என்கிற காரணத்தால், அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் முறையில் விதி அமைக்கப்பட்டிருக்கிறது. அதே சமயத்தில் நான் ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இன்றைக்கு பொது வாழ்வில் ஈடுபட்டிருக்கிறவர்கள் பேசுவதாக இருந்தாலும் சரி அல்லது

18th August 1960] [Sri C. Subramaniam]

எழுதுவதாக இருந்தாலும் சரி, நம்முடைய நாட்டின் தரத்திற்கும் பண்புக்கும் மாறுமல் இருக்கக்கூடிய அளவில் பேசுவதாகவோ, எழுதுவதாகவோ இருக்கவேண்டும். நமது நாட்டின் மக்களுடைய தரம் குறையாத அளவில் அவைகள் இருக்கவேண்டும். இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமையில் ஒருவரைப்பற்றி எழுதக்கூடியதை வைத்துக்கொண்டும் பேசுவதை வைத்துக்கொண்டும் தான் அவருடைய மதிப்பைக் கணக்கிட வேண்டியதாக இருக்கிறது. அந்த அளவில் ஒருவருடைய மதிப்பும் பண்பும் குறையாமல் இருக்கக்கூடிய அளவில் இருக்கவேண்டும். ஒருவருடைய மதிப்பை கணக்கிடுவது அவரைப்பற்றி பத்திரிக்கைகளில் எப்படி வருகிறது, அவரைப்பற்றி எப்படி பேசுகிறுர்கள், எப்படி எழுதுகிறுர்கள் என்பதைப் பொறுத்துதான் கணக்கிடுகிறுர்கள். ஆகவே அந்த அளவில் அவருடைய தரமும் மதிப்பும் குறையாத அளவில் இருக்கவேண்டும். பல்வேறு அரசியலில் ஈடுபடுகிறவர்களுடைய மதிப்பைப்பற்றி எப்படி கணக்கிடுகிறுர்கள் என்ருல் அவரைப்பற்றி எந்த அளவில் பத்திரிகைகளில் வருகிறது என்றும் எந்த அளவில் பேசப்படுகிறது என்பதையும் வைத்துக்கொண்டுதான் கணக்கிடுகிறுர்கள். அதை வைத்துக் கொண்டுதான் நம்முடைய பண்பாட்டை மதிப்பிடுகிறுர்கள். இதுதான் என்னுடைய கருத்து. அவருடைய பேச்சைப் பற்றியும் அவரைப்பற்றி எழுதுவதைப்பற்றியும் வைத்துக் கொண்டுதான் மற்றவர்களும், வெளியிலுள்ளவர்களும் கணக்கிடுகிறுர்கள். ஆகவே அந்த நிலைமையில் இன்றைக்கு ஒருவருக்கும் எந்த விதமான இழுக்கும் வரக்கூடாது என்ற அடிப்படையில் இப்படிப்பட்ட ஒரு சட்டம் கொண்டுவரப்படுகிறது. ஒருவரைப் பற்றி மதிப்பிடுவது அவருடைய பேச்சைப்பற்றியும் அவரைப் பற்றி எழுதுவதைப் பற்றியும் பொறுத்ததாக இருக்கிறது. அதற்குமேல் பேசுவதாக இருந்தால் டெபர்மேஷன் எடுத்துக் கொள்ளலாம். இது இருந்தாலும்கூட இன்றைக்கு எல்லோரும் ஒன்ருக சேர்ந்து ஒரு கட்டுப்பாட்டை நமக்குள் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற அவசியம் இருப்பதால் அதற்கு அனுசரணையாக சட்டம் செய்யப்படுகிறது. எழுதுவதிலும் பேசுவதிலும் வெவ்வேறு முறை இருக்க முடியாது. அதற்கு அவசியம் கிடையாது என்ற அடிப்படையில் ஒரு கட்டுப்பாடு இருக்கவேண்டும், அதற்கு ஒரு கட்டுப்பாடு ஏற்படுத்திக் கொள்ள வேண்டியது அவசியம் என்பதை நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அதிலும் முக்கியமாக பேப்பரையாவது அங்கே இருக்கக்கூடியவர்கள் படித்து விட்டு மறந்து போய் விடலாம். ஆனல் ஒருவரைப்பற்றி எழுதுவது அச்சடிக்கப்பட்டு வெளி வந்தால் அதனல் பெரிய தீமை ஏற்படலாம். அச்சடித்து வந்திருக்கிறது, அதனல் கொஞ்சமாவது உண்மை இல்லாமல் இருக்காது என்று நினைக்க ஆரம்பித்து விடுகிறுர்கள். அதனல் அச்சடிப்பதில் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியதாக இருக்கிறது. ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும். ஒருவருடைய மதிப்பு

காப்பாற்றப்பட வேண்டும், நமது நாட்டினுடைய பண்பு காப்பாற்றப்பட வேண்டும். அந்த முறையில் சட்டம் இயற்றப் பட்டிருக்கிறது. நம்முடைய ஒழுக்கத்தையும் கட்டுப்பாட்டை யும், ஏற்படுத்துவது அவசியமாக இருக்கிறது என்பதை இன்றைக்கு வலியுறுத்திச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த மசோதா முதல் கட்டத்தில் வந்தபோது இதற்கு எல்லோ ருடைய ஆதரவும் இருந்தது என்பதைப் பார்த்து சந்தோஷப் பட்டேன். அதே முறையில் இந்த மாறுதலுக்கும் ஒவ்வொரு வருடைய ஆதரவும் இருக்கும் என்கிற முறையில் கூட்டுப் பொறுக்குக் கமிட்டியால் திருத்தப்பட்ட மசோதாவை எல்லோரும் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

Sri M. KALYANASUNDARAM: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மாதிரியான ஒரு சட்டத்தைக் கொண்டுவந்து அதை இந்தச் சட்டசபையில் நிறைவேற்றும் அளவுக்கு ஒரு நிலைமை ஏற்பட்டதைப்பற்றி நாம் வருந்தத்தான் வேண்டியதாக இருக்கிறது. இம்மாதிரியான ஒரு மசோதாவுக்கு ஆதரவு கொடுப்பது என்ற முடிவுக்கு வந்து, அதற்கு ஆதரவு கொடுக்க ஆலோசனை செய்திருக்கிறேன். இதற்கு ஆதரவு கொடுக்க வேண்டியது அவசியம் என்று முடிவு செய்திருப்பதை நான் முதலில் தெரிவித்துக்கொள்ளுகிறேன். துரதிருஷ்டவசமாக நம்முடைய நாட்டில் சில பத்திரிகைகள் நடத்தும் விதத்தைப் பார்த்தால், சில பத்திரிகைகள் பணம் சம்பாதிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் பொது மக்களுடைய பண்பு, ஒழுக்கம் கெட்டுப்போகக்கூடிய அளவில் நடத்தி வருகிறார்கள். அவர் களுக்கு பணம் சம்பாதிப்பதுதான் ஒரு குறிக்கோள். அவர்கள் பணத்தாசை பிடித்து எப்படியாவது பணம் சம்பாதிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் தாழ்ந்த நிலைமையில் பத்திரிகை களை நடத்தி வருகிறார்கள். அந்த மாதிரி நிலைமை ஏற்பட்டிருப் பதை தடுக்க வேண்டியது ஜனநாயக நாட்டில் அவசியமாக இருக்கிறது. அப்படிக் கருதி இருக்கக்கூடிய காரணத்தால் என் கட்சியின் சார்பில் நான் ஆதரவு கொடுக்க முன் வந்துள்ளேன்.

நம்முடைய நாடு ஜனநாயகப் பண்பாட்டில் செல்ல வேண்டும். நம்முடைய நாட்டு மக்களுடைய முன் அறிவுக்கு ஏற்ப, அவர் களுடைய பண்பாட்டிற்கு ஏற்ப பத்திரிகைகள் நடக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. அந்த நோக்கத்துடன் தான் என்னுடைய அரசியல் உரிமைப் பிரச்னையைப்பற்றிப் பேசும்போது கூட குறிப்பிட்டேன். நமக்கு தனிப்பட்ட பண் பாடு இருக்கிறது. ஆங்கிலேயர் பின்பற்றியதை பின்பற்ற வேண்டிய அவசியம் இருந்தாலும் நம்முடைய பண்பாட்டு அடிப் படையில், நம்முடைய மக்களுடைய அறிவு ஆற்றல் அடிப்படை யில் ஜனநாயகம் நடக்க வேண்டும்; அதற்கு ஒரு கட்டுப்பாடு இருக்க வேண்டும்; அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டியதாக இருக்கிறது. அப்படிக் காப்பாற்றக்

18th August 1960] [Sri M. Kalyanasundaram]

கூடிய எந்த விதமான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்வதிலும், கட்டுப்பாட்டை அமைப்பதிலும் அரசாங்கத்துடன் ஒத்துழைக்க, ஒத்துழைப்பைக் கொடுக்க கம்யூனிஸ்ட் கட்சி எப்பொழுதும் தயங்கியது இல்லை; தயங்கவும் தயங்காது என்பதற்கு அடையாளமாக இந்த மசோதாவுக்கு நாங்கள் ஆதரவு கொடுக்கிறோம் என்பதை முதலில் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

சில பத்திரிகைகளை நடத்துபவர்கள் மீது இந்தச் சட்டத்தை உபயோகப்படுத்தப்போவதை நான் வரவேற்கிறேன். பத்திரிகைகளை நடத்துகிறவர்களும் சரி, பொது வாழ்வில் ஈடுபடுகிறவர்களும் சரி நல்ல பண்பாடுடையவர்களாக இருக்கவேண்டும். சில பத்திரிகைகள் பணம் சம்பாதிக்க வேண்டும் என்ற ஒரே ஒரு குறிக்கோளை மட்டும் வைத்துக்கொண்டு எவ்வளவோ கேவலமாக பத்திரிகைகளை நடத்தி வருகிறார்கள். அவர்கள் கடுமையான குற்றங்களைத்தான் செய்கிறார்கள். இது மோசமான குற்றம் செய்யக்கூடியதாக ஆகிறது. பொது வாழ்வில் ஈடுபடுகிறவர்களைப்பற்றியும், கேவலமாக எழுதுகிறார்கள். அதனால் பலர் பாதிக்கப்படுகிறார்கள். அதிலும் குறிப்பாக சினிமாவில் ஈடுபடுகிறவர்கள் ரொம்பவும் நசுக்கப்படுகிறார்கள். பலரைப் பற்றி கேவலமாக அச்சடித்து பிரசுரம் செய்து அதன் மூலமாக பணம் சம்பாதிக்க முயற்சி செய்கிறார்கள். கள்ள நோட்டு அச்சடித்து சம்பாதிக்க முற்படுவதைப் போன்று இவர்களும் சம்பாதிக்க முற்படுகிறார்கள். கள்ள நோட்டு அச்சடிக்கக்கூடியவர்கள் கூட தாங்கள் சம்பாதிக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் தான் அந்தக் குற்றத்தைச் செய்கிறார்கள். ஆனால் இப்படிச் சம்பாதிக்கவேண்டும் என்று நினைக்கிறவர்கள் தாங்கள் சம்பாதிக்க முற்படுவதோடு, பிறருடைய பணத்தையும் கொள்ளையடிக்க முற்படுகிறார்கள். அவர்களைவிட இப்படி பத்திரிகை நடத்துகிறவர்கள் அதிகப்படியான குற்றத்தைப் புரிய முற்படுகிறார்கள். அவர்கள் பிரசுரிக்கும் கார்ட்டூன்களைக் கண்டால் எவ்வளவோ கேவலமாக இருக்கிறது. அவர்களுடைய பத்திரிகைகளில் அரை நிர்வாணமாக உள்ள படங்களையெல்லாம் பிரசுரிக்கிறார்கள். பல நிருபர்கள் அவைகளையெல்லாம் சேகரித்து என்னிடம் கொண்டு வந்து காண்பித்திருக்கிறார்கள். அவர்களுக்கு நான் ரொம்பவும் கடமைப்பட்டிருக்கிறேன். நான் அந்த மாதிரிப் பத்திரிகைகள் படிப்பதில் உற்சாகம் காட்டுவதில்லை. அதைப் படிக்கிறபோது தமிழ்நாட்டில் அப்பேர்ப்பட்ட பத்திரிகைகள் எல்லாம் எப்படி வந்தன, எந்த நாட்டில் இருந்து அந்த மாதிரியான சரக்கை இறக்குமதி செய்தார்கள் என்று யோசிக்க வேண்டியிருக்கிறது. மேல் நாட்டு நாகரீகத்தைப் பத்திரிகை தர்மத்தில் புகுத்தி தமிழ்நாட்டுப் பண்பாட்டுக்கே குந்தகம் விளைவிப்பது முறை அல்ல. இப்படி மிகக் கேவலமான முறையில் பிரசுரிப்பது தேவை இல்லாதது. ஆகவே தான், நான் கூட, இந்த மசோதாவுக்கு இணங்கவேண்டி நேர்ந்தது.

(Sri K. Vinayakam in Chair)

இன்னும் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள், சில பத்திரிகை ஆசிரியர்கள் மீது நடவடிக்கை எடுத்தால் அவர்கள் கோர்ட்டில் நல்ல சிறந்த வக்கீல்களை வைத்து வாதாடி அபராதத் தொகையோடு தப்பிவிடுகிறார்கள் என்று. அதுவும் இம்மாதிரிப் பத்திரிகைகளை ஆயிரக்கணக்கில் விற்று கொள்ளை அடிக்கிறவர்களுக்கு 500 ரூபாய் அபராதம் என்பது சிரமமானதல்ல. இதைக் கட்டுவதற்கும் அவர்கள் பின் வாங்குவதில்லை. இந்த மாதிரியாகப் பின்னால் அபராதம் கட்டிவிடலாம் என்கிற முறையில் துணிந்து இந்தக் காரியங்களைச் செய்கிறார்கள். ஆகையால் தான் கடுமையான தண்டனை கொடுக்க வேண்டியிருக்கிறது என்பதாக ஆய்வுக் குழுவில் அமைச்சர் அவர்கள் கூறினார்கள். அதுவும் அவசியமானதுதான் என்று நான் அதை ஏற்றுக் கொண்டிருக்கிருக்கிறேன்.

இப்படிப் பணம் சம்பாதிப்பதையே குறியாகக் கொண்டவர்களுக்கு விளம்பரமும் அதிகமாகக் கிடைக்கிறது. இந்த ஆபாசப் பத்திரிகைகளில் நிறையப் பணம் கொடுத்தும் பலர் விளம்பரம் செய்கிறார்கள். அதைத் தவிர பணமும் கொடுக்கிறார்கள். இப்பேர்ப்பட்ட பத்திரிகைகளுக்கு சர்க்காராவது தங்கள் விளம்பரங்களைக் கொடுக்காமல் இருக்கவேண்டுமென்பது என்னுடைய அபிப்பிராயம். (கனம் ஸ்ரீ சி. சுப்பிரமணியம் :—சர்க்கார் விளம்பரங்கள் கொடுக்கப்படுவதில்லை.) கொடுக்காமல் இருந்தால் சந்தோஷம். ஆனால் அம்மாதிரிப் பத்திரிகைகளில் மத்திய சர்க்கார் விளம்பரம் வந்திருந்ததைப் பார்த்ததாக எனக்கு ஞாபகம். ஆகவே சர்க்கார் சம்பந்தப்பட்ட எந்த விளம்பரமும் இந்த மாதிரிக் குற்றங்கள் செய்யக்கூடிய பத்திரிக்கைகளுக்குக் கொடுக்கக்கூடாது என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்.

மேலும் சட்டத்தினால் இந்தமாதிரியான ஆபாசப் பத்திரிகைகளைத் தடுத்துவிடலாம் என்று நினைப்பது முடியாது. மக்கள் உணர்ச்சிகளைத் தட்டி எழுப்புவதன் மூலம்தான் சரியான முடிவுக்கு வரமுடியும். குறிப்பாக பிரசாரத்தில்—அமைச்சர் அவர்கள் கலந்து கொண்டிருக்கக்கூடிய கட்சியும், இதர கட்சிகளும் கூடக் கலந்து கொள்வதுதான் நன்றாக இருக்கும். இப்பேர்ப்பட்ட பத்திரிகைகளினாலும் கூட—அரசியலில் கொஞ்சம் லாபம் ஏற்படும் என்பதாக—அரசியல் கண்ணோட்டத்தோடு ஆளும் கட்சியினர் நடந்து கொள்ளக்கூடாது. அந்தக் கட்சியைக் குறிப்பிடுவது அவர்கள் மற்ற கட்சியினர்களுக்கும் வழிகாட்டியாக இருக்க வேண்டும் என்பதனால் தான். முதல் கட்சியாக இருக்கக்கூடிய அவர்களுக்கு இதில் ஒரு தனிப்பொறுப்பு இருக்கிறதென்பதை நான் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். எல்லாக் கட்சிக்காரர்களையும், கட்சிப் பத்திரிகை ஆசிரியர்களையும், கமிஷனர் அவர்களையும் கூட்டிக் கலந்து பேசி இதுபற்றி நல்லதொரு முடிவுக்கு வரலாம். இந்தச் சட்டத்தைக்கொண்டு எதிர்க்கட்சியையும், எதிர்க்கட்சிப் பத்திரிகைகளையும் அடக்கிவிட முடியும் என்கிற பயம் எனக்குக்

கிடையாது. என் கட்சியையோ, என் கட்சிப் பத்திரிகைகளையோ பற்றி நான் பயப்படவில்லை. ஆகையால் தான் இந்தச் சட்டத்திற்கு ஆதரவு கொடுக்கிறேன். அதே சமயத்தில் ஜனங்களுடைய பண்பாட்டை ஒழுக்கத்தை உயர்த்துவதற்குப் பிரசாரம் தான் சிறந்த சாதனமாக இருக்கும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன். மதுவிலக்கு பற்றிப் பிரசாரம் செய்கிறோம். தீண்டாமை ஒழிப்பு பற்றி பிரசாரம் செய்கிறோம். அப்பேர்ப்பட்ட முறைதான் இதற்கும் பொருத்தமாக இருக்கும். எல்லாக் கட்சிகளும் சேர்ந்து வகுத்துக்கொண்ட சில வழி முறைகளின் மூலம்தான் நம்முடைய நோக்கத்தைச் சிறந்த முறையில் ஈடேற்றிக்கொள்ள முடியும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ஏனென்றால் முன்னமேயே நாம் ஆபாச விளம்பரங்களைத் தடை செய்யவேண்டுமென்கிற ஒரு சட்டம் கொண்டுவந்தோம். அப்போதே என்னுடைய கட்சியின் சார்பில் அந்தச் சட்டத்தில் உள்ள குறைபாடுகளை எல்லாம் எடுத்துக் காட்டப்பட்டது. சென்னை நகரத்தில் இப்போது அந்தச் சட்டம் என்ன முறையில் அமுல் நடத்தப்படுகிறது என்பதைப் பார்க்கும்போது, அந்தச் சட்டம் இருக்க வேண்டியதே நியாயமா என்கிற சந்தேகம் உண்டாகியிருக்கிறது. நான் கூட அந்தச் சட்டத்தை எதிர்த்து சட்டமறுப்பு செய்யலாமா என்று உத்தேசித்திருக்கிறேன் என்பதை கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். காங்கிரஸ் கட்சியின் சார்பில் அமைச்சர் ஸ்ரீ சி. சுப்பிரமணியம் அவர்கள் பேசுவார்கள் என்று விளம்பரம் செய்வது ஆபாசமா? அதுபோல கம்யூனிஸ்ட் கட்சி பொதுக் கூட்டத்தில் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் பேசுவார்கள் என்று விளம்பரம் செய்வது ஆபாசமா? இப்படிக் கட்சிப் பொதுக்கூட்டங்கள், மகாநாடுகள் நடப்பது பற்றி விளம்பரம் செய்கிற சுவரொட்டிகள்கூடத் தடைச்செய்யப் படுகின்றன இந்தச் சட்டத்தின் கீழ். சென்னை நகரத்தில் கிட்டத்தட்ட 20 லட்சம் ஜனத்தொகை இருக்கிறது. இவ்வளவு பெரிய நகரத்தில் கட்சிப் பொதுக்கூட்டங்கள், மகாநாடுகள் சம்பந்தப்பட்ட சுவரொட்டிகள் கூட கமிஷனரால் குறிப்பிடப்படுகிற இரண்டொரு இடங்களில் தான் ஒட்டலாம், அதற்கும் கார்ப்பரேஷனுக்கு வரி கட்டவேண்டும்—இப்போது சபாநாயகர் ஆசனத்தில் அமர்ந்திருக்கிற அங்கத்தினருக்கு இதுபற்றி சொந்த அனுபவமே இருக்கும் என்று நினைக்கிறேன்—ஒரு சுவரொட்டிக்குப் பத்து ரூபாய், பதினைந்து ரூபாய் என்று கார்ப்பரேஷனுக்குக் கட்ட வேண்டும்—இப்படிப் பணம் வசூலிப்பதைக் கூட ஆட்சேபிக்கவில்லை—எந்தச் சட்டம் என்றாலும் அதன் மூலம் சர்க்காருக்கோ, ஸ்தல ஸ்தாபனங்களுக்கோ வருமானம் ஏற்படக்கூடிய வகையில் தான் ஒவ்வொன்றும் கொண்டுவரப்படுகிறது—பணம் போனாலும் கூட இருக்கக்கூடிய வசதிகளைப் பறிப்பது என்பது கூடாது. சுவரொட்டிகள் தனிப்பட்டவர்களின் வீடுகளில் ஒட்டி ஆபாசம் செய்யப்பட்டிருந்தால் நடவடிக்கை எடுத்துக்கொள்ளட்டும்—

ஆனால் அரசியல் கட்சிகளுக்கு இருக்கக்கூடிய நியாயமான உரிமைகளைக் கூடப் பறிப்பது என்பது சரியானதாகாது என்று தெரிவித்துக் கொள்கிறேன். அந்தச் சட்டத்திற்கு ஆதரவு கொடுத்தது கூட இப்போது தவறாகப் போய்விட்டதே என்று நினைக்க வேண்டியிருக்கிறது. ஆகவே இதுபற்றி எல்லாக் கட்சிகளும் சேர்ந்து கூடிப் பேசி நல்லதொரு முடிவுக்கு வரவேண்டும். அதைப்போலவே தான் இந்தச் சட்டம் சம்பந்தப்பட்ட வகையிலும் செய்தால் நன்மையாக அமையுமே தவிர அந்தச் சட்டம் போல அமுலாக்கப்படுவது நல்லது அல்ல என்பதற்காக இதைக் குறிப்பிடுகிறேன். அதற்காக நான் இந்தச் சட்டத்திற்குக் கொடுத்த ஆதரவை வாபஸ் பெறப்போவதில்லை. கொடுத்த ஆதரவு கொடுத்தது தான். ஆனாலும் இதை நல்ல முறையில் கொண்டுவரவேண்டும் என்று சொல்லிக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

SRI V. SANKARAN: கனம் சேர்மென் அவர்களே, சர்க்கார் கொண்டு வந்திருக்கிற இந்த மசோதாவானது நல்ல அமைப்பில் உள்ள மசோதா. அதிலும் முக்கியமாக நல்ல திருத்தங்கள் எல்லாம் பொறுக்குக் கமிட்டியினால் செய்யப்பட்டிருக்கிறது. எனக்கு முன்னால் பேசிய நண்பர் குறிப்பிட்டது போல நம் ராஜ்யத்தில் ஒரு சில தினசரிப் பத்திரிகைகள் ஆபாசப் படங்கள் போடுவது குறித்து, ஆபாச விளம்பரங்கள் செய்வது குறித்து அதைத் தடுப்பதற்காகக் கொண்டுவரப்படுகிறது இது என்று நினைக்கிறேன். அதிலே முக்கியமாக அந்தப் பத்திரிகையாளர்கள் வெளியில் பலவிடத்தில் சொல்லிக் கொள்கிறார்கள். தமிழனது தன்மானத்திற்காகப் போராடுவோம் என்று சொல்கிறார்கள். தமிழனது பண்பாட்டுக்காகப் போராடுவதாகச் சொல்கிறார்கள். அதே சமயத்தில் தமிழர்களுடைய உள்ளத்தையும், ஒழுக்கத்தையும் தமிழனுடைய தன்மானம் என்றும், தமிழனுடைய பண்பாடு என்றும் பாழ்படுத்தும் காரியங்களில் ஈடுபடுத்துகிறார்கள். அந்த முறையில் எடுத்துக் கொண்டு பார்க்கிறபோது உடனடியாக இந்த மசோதாவைப் போடவேண்டும். மிக ஆபாசமான விளம்பரங்களையும், கேவலமாக படங்களையும் பிரசுரித்துக் கொண்டு, பணம் சம்பாதிப்பதற்கு தங்கள் பத்திரிகைகளை நடத்தக் கூடியதை தடுப்பதற்காக இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. அதே சமயத்தில் ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். தினசரிப் பத்திரிகைகள் பல நடிகைகளின் படங்களைப் பல கோணத்தில் இருந்து எடுக்கப்பட்ட படங்களை வெளியிடுகின்றன. சட்டத்தில் உள்ள இரண்டு மூன்று க்ளாசில் அவற்றைத் தடுக்க முடியுமா என்பது சந்தேகம். இந்தப் படங்களை நடிகைகளின் சம்மதத்துடனேயே, அவர்களால் கொடுக்கப்பட்டு வாங்கி வந்து பிரசுரித்ததாகச் சொன்னால் இண்டெண்டெட் பிளாக் மெயிலிங் என்று வராது. [Mr. Speaker in the Chair.] அது போலவே இது ஒரு உயர்ந்த கலை என்று வியாக்யானம் செய்யப்படுகிறபோது க்ராஸ் இண்டீசெண்ட் என்ற இனத்திலும் வராது

18th August 1960] [Sri V. Sankaran]

போகும் ஆகவே இதில் அவைப்பற்றித் தனியாக இருப்பது நலம். அதற்காக நான் தனியாக ஒரு திருத்தம் கொடுத்திருக்கிறேன். நான் கொடுத்திருப்பது போல விளக்கமாக இருந்தால் நன்றாக இருக்குமென்று நினைக்கிறேன்.

In item (*b*) add at the end the words " intended or likely to excite the baser and sexual feelings in young persons or " என்று போட்டுவிட்டால் நன்றாக இருக்கும். இதற்குள் எல்லாவற்றையும் அடக்கிவிடலாம். இது போன்ற படங்களையும், சமாசாரங்களையும் வெளியிடும்போது பூர்ணமாகக் கட்டுப்படுத்துவதற்கு வழிவகை செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக அட்வர்டைஸ்மெண்ட் சம்பந்தமாக ஒரு மசோதா முன்னால் சட்டமாக்கப்பட்டது. இந்த மசோதாவை பூரணமாக அமுல் நடத்த வேண்டும். மூர்மார்க்கட்டிலே சென்று பார்த்தால் சில கடைகளில், "Health and Efficiency and Nude Societies" போட்ட புஸ்தகங்களை,—நம் நாட்டில் வெளியிடப்பட்ட புஸ்தகங்களையும் சரி, வெளிநாட்டிலிருந்து வரும் புஸ்தகங்களையும்—வெளியிலே தொங்கவிட்டிருக்கிறார்கள். அவைகளையெல்லாம் உடனடியாகப் பறிமுதல் செய்யவேண்டும். இந்த மசோதா நிறைவேற்றப்பட்டு மூர்மார்க்கட்டிலுள்ள எல்லாப் பழைய புஸ்தகக் கடைகளிலும் விற்கப்படும் இந்த ஆபாச புஸ்தகங்களைப் பறிமுதல் செய்ய நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த மசோதா ஏட்டளவில் இல்லாமல் பூரணமாக நிறைவேற்றப்படுமானால் சில விதிகள் பத்திரிகைகளின் நடவடிக்கைகளைக் கண்டிப்பாக கட்டுப்படுத்த வேண்டுமென்று சொல்லிக் கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

**SRI S. M. ANNAMALAI:** கனம் சட்டமன்றத் தலைவர் அவர்களே, இந்த மசோதா செலக்ட் கமிட்டிக்குப் போவதற்கு முன்னால் சட்டமன்றத்தில் வந்தபோது நான் ஒரே ஒரு கிளாசைத்தான் மிகவும் கடுமையாக ஆட்சேபித்தேன். அதற்குக் காரணம் ஆபாச விளம்பரங்களை நாம் கட்டுப்படுத்த வேண்டுமென்று இந்தச் சட்டமன்றத்தில் கொண்டுவந்து மசோதாவே மற்ற கட்சிகளை அடக்கப் பயன்படுமோ என்று அச்சப்பட்டேன். அதனால்தான் அப்போது கிளாஸ் 3 (பி) பிரிவை ஆட்சேபித்தேன். இப்பொழுது அந்த சப்-கிளாஸை செலக்ட் கமிட்டி நல்ல முறையில் பரிசிலனை செய்து நான் சொன்ன கருத்துக்களை எற்றுக்கொண்டு அந்த சப்-கிளாஸை அப்படியே நீக்கிவிட்டிருக்கிறார்கள். மேடையிலே பேசும் பேச்சுக்களைக்கூட இந்த மசோதா கட்டுப்படுத்தக்கூடாது. அப்படி பேச்சுக்களைக் கட்டுப்படுத்துவதாக இருந்தால், மற்ற கட்சிகளை அடக்குவதற்கு வேண்டுமானால் பயன்படுமே தவிர, உண்மையிலே இந்தச் சட்டம் நல்ல முறையில் அமுல் நடத்த முடி-

யாது. காரணம் இன்றைக்கு இருக்கும் நிலையில் மற்றக் கட்சிகளை அடக்க வேண்டுமென்ற எண்ணம் சர்க்கார் உத்தியோகஸ்தர்களிடத்திலே இருக்கிறது. அதனால்தான் சப் கிளாஸ் (பி) இருக்கக்கூடாது என்று ஆட்சேபித்தேன். கனம் அமைச்சர் அவர்கள் நல்ல முறையில் ஆலோசனை செய்து சப் கிளாஸ் (பி) யை எடுத்து விட்டார்கள்; அதற்காக அவர்களையும் செலக்ட் கமிட்டியையும் உண்மையிலே பாராட்டுகிறேன்.

சர்வகட்சித் தலைவர்கள் ஒன்றாகக் கூடி எப்படி எப்படி மேடையில் நடந்து கொள்ளவேண்டுமென்ற முடிவுக்கு வரவேண்டும். உதாரணத்திற்கு ஒன்று சொல்ல விரும்புகிறேன், அண்மையில் கும்பகோணத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியைப் பார்த்தால் அப்படி மேடையில் நடந்த கலவரத்தை ஒட்டித்தான் அந்த அளவிற்குப் பெரும் பரபரப்பு ஏற்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் உண்டாகா வண்ணம், சர்வகட்சிக்காரர்கள் ஒன்றாகக்கூடி எப்படி எப்படி மேடையில் பேசவேண்டும், எப்படி எப்படி தமிழனுடைய பண்பாட்டைக் காப்பாற்ற வேண்டுமென்று நல்ல முறையில் ஆலோசனை செய்யவேண்டுமானால் அதற்கு ஒரு உடன்பாட்டிற்கு வரலாம். சப் கிளாஸ் (பி) யை நீக்கியதை ஒட்டியும், இன்னும் இந்த மசோதாவில் நல்ல திருத்தங்கள் செய்ய வேண்டும். முதல் தடவையாக குற்றம் செய்யும்போது போடும் தண்டனையைவிட இரண்டாவது அல்லது மூன்றாவது குற்றம் செய்தால் "6 மாதங்களுக்குக் குறையாமல்", என்று செலக்ட் கமிட்டி திருத்தம் செய்திருக்கிறது. இதை நான் மனமார வரவேற்கிறேன், என்று சொல்லி, இந்த மசோதாவை உண்மையிலே பாராட்டி என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்ளுகிறேன்.

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை ஆதரித்து இரண்டொரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். இரண்டு மாதங்களுக்கு முன்பு கனம் அமைச்சர் அவர்கள் இதைச் சபை முன்பு வைத்த போதும் பொறுக்குக் கமிட்டிக்கு இந்த மசோதா போகவேண்டிய அவசியம் இல்லை, என்றும் உடனடியாக ஏன் நிறைவேற்றக் கூடாது என்றும் கேட்டேன். பொறுக்குக் கமிட்டிக்கு விட வேண்டிய நியாயம் இல்லை. உடனடியாக சட்டம் இயற்ற வேண்டுமென்று சொல்லியிருக்கிறேன். ஆகையால் இதைப்பற்றி நாம் அதிகமாகப் பேசவேண்டிய அவசியம் இல்லை. இங்கு சில பத்திரிகைகள் மிக ஆபாசமாக, கீழ்த்தரமாக எழுதிக்கொண்டு வருகிறார்கள், சிறுவர்கள், அதிலும் காலேஜ் மாணவ மாணவிகள் அதைப் படித்துக் கெட்டுப் போகிறார்கள். இதைப்பற்றி அதிகமாகச் சொல்லவேண்டியதில்லை. இதைப் பொறுக்குக் கமிட்டி நன்றாகப் பரிசீலனை செய்து சில திருத்தங்கள் செய்திருக்கிறார்கள். அதே நேரத்தில் ஸ்ரீ எம். கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னபடி அரசியல் கட்சிகள் பொதுக்கூட்டங்கள் போடுவதுபற்றி கார்பொரேஷனாக இருந்தாலும் சரி, முனிசிபல் லிமிட்டாக இருந்

18th August 1960] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

தாலும் சரி எந்தெந்த அட்வர்டைஸ்மெண்ட் எப்படி எப்படிப் போடவேண்டுமென்று நிர்ணயித்து அதற்கு வேண்டிய விதிகளை நமது சர்க்கார் அமைத்தால் நலமாக இருக்கும். இந்த மசோதாவைப் பூர்ணமாக ஆதரிக்கிறேன் என்று சொல்லிக் கொண்டு என் வார்த்தைகளை முடித்துக் கொள்ளுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: கனம் சபாநாயகர் அவர்களே, பொதுவாக இந்த மசோதாவுக்கு நல்ல வரவேற்பு இந்த அசெம்பிளியில் இருப்பதோடு மட்டுமல்லாமல், பொது மக்களும் இதை வரவேற்பார்கள் என்ற சந்தேகமே கிடையாது. ஸ்ரீ கல்யாணசுந்தரம் அவர்கள், ஸ்ரீ வி. கே. ராமசாமி முதலியார் அவர்கள் குறிப்பிட்டதுபோல் இது ஏதோ பெரியவர்களை மட்டும் பாதிப்பதாக இருந்தால் பரவாயில்லை. ஆனால் பிஞ்சு உள்ளத்தையும், வளரும் மனதையும் பாதிக்கும் முறையிலே பல பிரசுரங்கள், பத்திரிகைகள் வருவதைப் பார்க்கிறோம். புத்தகங்கள் வருவதையும் கூடப் பார்க்கிறோம். அப்படிப்பட்ட சில புத்தகங்கள் என்னுடைய கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டன. அதன் பேரில் நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறோம். தமிழ் நாட்டில், தமிழில் இம்மாதிரி புத்தகங்கள் எழுதுகிறார்களா என்ற ஆச்சரியம் ஏற்பட்டது. அந்த அளவுக்கு மோசமான, ஆபாசமான முறையில், மிருக உணர்ச்சியைத் தட்டி எழுப்பும் வகையில் புஸ்தகம் எழுதி அதற்குள்ள படமும் போட்டு மாணவ மாணவிகள் இளைஞர்கள் வாங்கிப் படிக்கும் முறையிலே அதைச் செய்யக்கூடிய கூட்டம் இருக்குமானால் உண்மையிலேயே அது தேசத் துரோகம், சமூகத் துரோகம் என்று சொன்னால் இதுமாதிரி நடவடிக்கைகளில் ஈடுபடுகிறவர்கள்தான் தேசத் துரோகிகள், சமூகத் துரோகிகள் என்று கருதவேண்டியதாய் இருக்கிறது. இதை அடியோடு வேருடன் களைந்து எறியவேண்டியது அவசியமாகும். சட்டம் செய்வதோடு மட்டும் அல்லாமல், பொதுமக்களும், அரசியல் கட்சிகளும் இதைத் தங்களுடைய பொதுநோக்கமாகக் கொண்டு எங்கு தவறு ஏற்பட்டாலும் அதை நாம் களைந்தெறியத் தயார் என்ற முறையில் பாடுபடும்போதுதான் உண்மையிலேயே பெரிய அபாயத்தை நீக்க முடியும் என்று நம்புகிறேன்.

தினசரிப் பத்திரிகை, வாரப்பத்திரிகை, 15 நாட்களுக்கு ஒரு முறை வரும் பத்திரிகை, மாதப்பத்திரிகை இப்படியெல்லாம் பத்திரிகைகள் வருகின்றன. இதிலே போஸ்டர்களை அடித்து ஒட்டுவது ஒரு தனிக் கலையாக ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. அந்தப் போஸ்டர்களைப் பார்த்தாலேயே அந்தப் புஸ்தகங்களைப் படிக்கவேண்டுமென்ற எண்ணம் தூண்டப்படுகிறது. அதையும் தவிர்க்கக்கூடிய முறையில் விதி செய்யப் போகிறோம். இதை அரசியல் நோக்கத்தோடு கொண்டுவருகிறார்களோ என்று பலருக்குச் சந்தேகம் உண்டாகியிருக்கிறது. கனம் அங்கத்தினர் ஸ்ரீ அண்ணாமலை போன்றவர்களுக்கு மனதிலே பெரும் பயம் ஏற்பட்டிருக்கிறது. இந்தப் பயம் ஏற்படுவதற்கு அவசியமே

இல்லை. ஆனால் சில சமயங்களில் அரசியல் மேடைகளிலேகூட கீழ்த்தரமாக போகும்போது அதை அரசியல் என்று சொல்ல முடியாது. அரசியலுக்கும் இதற்கும் சம்பந்தமே இல்லை. ஆனால் நல்ல அரசியல் நேர்மையான முறையில் இருக்க வேண்டுமென்று பேசுவதுதான் மிகவும் அவசியம் என்பதைச் சொல்ல விரும்புகிறேன். இதுமாதிரி எழுதுவதும் இதற்குமேல் முக்கியம். ஆபாசமான விளம்பரம் பற்றிய ஷரத்தை அமுல் நடத்தும்போது ஏற்படக்கூடிய குறைகளைப்பற்றிச் சொன்னேன். **Disfigurement of walls** அதுவும் முக்கியம். நாம் ஏதோ சென்னை நகரில் சுவர்களில் போஸ்டர்களை ஒட்டுவதுதான் விளம்பரம் என்று எண்ணுகிறோம். இதைப்பற்றி நான் விளம்பர நிபுணர்களைக்கூடக் கேட்டேன். இதில் ஏதாவது பலன் இருக்கிறதா என்று பார்த்தால், சுவர்களில் ஒட்டியிருப்பதினால் யாருக்கும் பலன் இருப்பதாகச் சொல்ல முடியாது. சுவரொட்டிகளை ஒட்டுவதற்கு செலவழித்த அளவிற்கான பலன் ஏற்பட்டு இருக்கிறதா என்று பார்த்தால் இருக்கவே இருக்காது என்றுதான் சொல்லவேண்டும். ஏதோ அவர்கள் மனதிலே ஒரு திருப்தி—ஆயிரம் போஸ்டர்கள், 10 ஆயிரம் போஸ்டர்கள் ஒட்டிவிட்டோம் என்று; போட்டா போட்டியாக ஒன்றின்மேல் ஒன்றாக ஒட்டி வந்தால் பலன் இல்லாமல் போய்விடுகிறது.

10–30 a.m. விளம்பரம் என்றால் எந்தயிடத்தில் போட்டால் மக்கள் பார்ப்பார்கள்? இந்த இடத்தில் பார்த்தால் விளம்பரம் இருக்கும் என்று மக்களுக்குத் தெரிந்தால் அங்கு சென்று மக்கள் பார்ப்பார்கள், இங்கு விளம்பரம் இருக்குமென்று. சென்னையில் சுவற்றில் எழுதுவதும், ஒட்டுவதும் ரொம்பவும் மோசமாக வந்துவிட்டதால் சட்டம் கொண்டுவர வேண்டியிருக்கிறது. அப்படி ஒட்டாதிருக்கும் பல நகரங்களைப் பார்த்திருக்கிறேன். ஆகவே, அங்கு விளம்பரம் இல்லையென்று அர்த்தமா? இல்லை. அங்கெல்லாம் அரசியல் கட்சிகள் இல்லையென்று அர்த்தமா? அரசியல் கட்சிக் கூட்டங்களுக்கும், கலை நிகழ்ச்சிகளுக்கும் எப்படி, எந்த இடத்தில் விளம்பரம் போடவேண்டுமென்று வெகு சுலபமாக முடிவு செய்ய முடியும். ஆகவே, சுவற்றில் எழுதி ஒட்டித்தான் விளம்பரம் செய்ய வேண்டுமென்றில்லை. ஒட்டலாம் என்றால், இன்னொருவர் கேட்பார் "அப்படியானால் ஏன் எழுதக்கூடாது" என்று? ஆகவே, சுவற்றில் எழுதுவதை நிறுத்த வேண்டும். அதைத் தவிர்த்து, விளம்பரம் செய்வதற்கு என்ன சௌகரியம் செய்து கொடுக்க வேண்டுமென்று பார்த்து, ஆலோசித்து, அதுபற்றி முடிவு செய்யச் சர்க்கார் தயாராக இருக்கிறது. ஆகவே, சுவற்றில் ஒட்டுவதைப் போலீஸார் அனுமதிக்கவில்லை. சில பத்திரிகைகளில்கூட, இது ஒரு அரசியல் மகாநாட்டைத் தடுக்க ஏற்பட்ட நடவடிக்கை, என்று எழுதியிருந்தார்கள். சட்டப்படி நடவடிக்கைகள் எடுக்கும் போது சில அசௌகரியங்கள் ஏற்படும். நாம் பழக்கப் பட்டதற்கு மாறாக, சில காரியங்கள் செய்யாமல் இருக்க வேண்டி வரும். எது நல்லது என்று ஆலோசித்து முடிவிற்கு வரவேண்டும். அந்த முறையில் சட்டத்தை அமுலாக்குவது ஒரு புறமிருக்க, இந்தச்

18th August 1960] [Sri C. Subramaniam]

சட்டத்தை அமுலாக்குவது மிகவும் அவசியம் என்ற கருத்தை வலியுறுத்திக் கொண்டு இந்த மசோதாவை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : The question is :—

" That the Indian Penal Code and the Code of Criminal Procedure (Madras Amendment) Bill, 1960 (L.A. Bill No. 7 of 1960) as amended by the Joint Select Committee be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clause 2 was put and carried.

*Clause 3.*

MR. SPEAKER : The motion is :—

" That Clause 3 do stand part of the Bill."

SRI V. SANKARAN : Sir, I move :

In item (*b*) add at the end the words " intended or is likely to excite the baser and sexual feelings in young persons or "

The amendment was duly seconded.

SRI V. SANKARAN : As I have explained in the general discussion, I have moved this amendment only to make the Bill more comprehensive and not to give any room to any publisher to print or publish any matter which can find some loophole to get out of the provisions of the Act. It will all depend upon the opinion of the person who judges the matter. Some judges, elderly people, may feel that some pictures in certain cases may not be indecent. Some of the pictures may not be construed to be only for blackmailing. Definitely there are many cases which would be enough to injure the morality of young persons. Therefore, to make the Bill more comprehensive I have brought this amendment, viz.,

" In item (*b*) add at the end the words " intended or is likely to excite the baser and sexual feelings in young persons or "

I have forgotten to give notice of similar amendments to the other sub-clauses. If the Government think that my amendment is a welcome thing, I would request the Government to move amendents to the other sub-clauses wherever necessary. I think my amendment is a resonable one. I hope the Government will accept it.

THE HON.. SRI C. SUBRAMANIAM : The words 'grossly indecent' in clasue (*b*) is sufficiently comprehensive and includes everything which the hon. Member wanted to be included. Fur-

ther, Sir, his amendment says ' sexual feelings in young persons '. Is the hon. Member young or old? The word 'young' is a very vague thing and I do not think anything would be gained by further dilating more than the words ' grossly indecent '. There have been very many judicial decisions on this term ' grossly indecent ' and it is a well-known phrase. I do not think we need go beyond that. I would request the hon. Member to withdraw his amendment.

The amendment of Sri V. Sankaran was, by leave, withdrawn.

Clause 3 was put and carried.

Clauses 4 and 5 were put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

" That the Indian Penal Code and the Code of Criminal Procedure (Madras Amendment) Bill, 1960 (L.A. Bill No. 7 of 1960) be passed."

MR. SPEAKER : Motion moved :

" That the Indian Penal Code and the Code of Criminal Procedure (Madras Amendment) Bill, 1960 (L.A. Bill No. 7 of 1960) be passed. "

* **SRI P. S. CHINNADURAI :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா இப்பொழுது சட்டமாக நிறைவேறயிருக்கிறது. இந்தத் திருத்த மசோதாவிற்குப் பிரஜா சோஷியலிஸ்ட் கட்சி சார்பில் முழு மனதோடு கூடிய ஆதரவை அளிக்கிறேன். இந்த விவாதத்தில் கனம் அமைச்சர் அவர்கள் பேசுகிறபோது குறிப்
10–30 a.m. பிட்டார்கள், மோசமான முறையில் செய்திகளையும், சில விவரங்களையும் வெளியிடுகிற புத்தகங்கள் தமிழில் வெளி வந்திருப்பதை நானே பார்த்தேன் என்று சொன்னார்கள். ஆங்கிலத்தில் இம்மாதிரியான புத்தகங்கள் ஏராளமாக வந்து கொண்டிருக்கின்றன. அப்படித் தமிழில் நம் ராஜ்யத்தில் பிரசுரமாவதையும், அவை விநியோகம் செய்யப்படுவதையும் நாம் தடுப்பதோடு மட்டும் நின்றுவிடாது, வேறு ராஜ்யங்கள் அல்லது வேறு நாடுகளிலிருந்து இம்மாதிரியான தவறான அல்லது மோசமான உணர்ச்சிகளைத் தூண்டக்கூடிய செய்திகளையும், விவரங்களையும் தாங்கி வரக்கூடிய செய்தித் தாள்களை அல்லது இதர பத்திரிகைகளை அல்லது மாத சஞ்சிகளை அல்லது புத்தகங்களைத் தடுப்பதற்கும்கூட இந்த மசோதாவை சரிவரப்பயன்படுத்த வேண்டுமென்பதுதான் என் வேண்டுகோளாகும். வெளிநாட்டிலிருந்து வருகிற புத்தகங்கள் என்றிருந்தாலும் அவற்றை தடுப்பதற்கும் இந்தச் சட்டம் நிச்சயம் அதிகாரம் அளிக்கிறது. ஆனால் அந்த அதிகாரத்தை உண்மையாகப் பயன்படுத்துவதற்கான ஒரு தைரியத்தை நம்

18th August 1960] [Sri P. S. Chinnadurai]

போலீஸ் அதிகாரிகளுக்கு இந்த ராஜ்ய சர்க்கார் நல்க வேண்டு மென்றுதான் நான் வேண்டிக் கொள்ளுகிறேன். அவை வெளிநாடு களிலிருந்து வந்தது, பகட்டான இடத்தில் வைக்கப்பட்டிருக் கிறது என்ற காரணத்திற்காக அதை விட்டு வைப்பதற்கு நம் மனம் இசையுமானால், இங்கிருக்கிறவர்கள் நாமும் அதன் நகலை எடுக்கலாமே அல்லது அதை மொழி பெயர்க்கலாமே என்று நினைப் பதை, இங்குள்ளவர்களுக்கு அந்த எண்ணம் பரவுவதைத் தடுக்க நம்மால் முடியாது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். என்னுடைய அபிப்பிராயத்தில், சமூகம் என்பது இருக்கிற வரையில், சாக்கடை என்பதும் இருக்கத்தான் செய்யும். சாக்கடையை அடியோடு தடுத்தால் அது சமூகம் முழுமைக்கும் பரவி விடக்கூடும். சாக்கடையை ஒழுங்குபடுத்தி "அண்டர் க்ரவுண்ட் ட்ரெயினேஜ்" வழி அதை ரெகுலேட் செய்ய இந்தச் சட்டத்தை பயன்படுத்த வேண்டுமென்பது என் மனப்பூர்வமான எண்ணம். இதை குறிப்பிடும்போது நான் சாக்கடையை ஆதரிப் பதாக எவரும் எடுத்துக் கொள்ளக்கூடாது. அது, ஒழுங்காகவும், சீராகவும் கட்டுப்படுத்தப்படவேண்டும். அப்பொழுதுதான் சமூகத்தைச் சீர்படுத்த முடியும் என்பது என் நம்பிக்கையாகும். அரசியல் கட்சிகள் சம்பந்தப்பட்ட வரையில் பேச்சிலேகூட சற்றுப் பண்போடு இருந்து கொள்ளவேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டதை நான் உண்மையிலேயே பாராட்டு கிறேன். அம்மாதிரிப் பேச்சிலே பண்பாடு குறையுமானல் அதைத் தடுப்பதற்கு இந்தச் சட்டத்திலே நாம் ஒன்றும் இடம் வைக்க வில்லை. முன்பு வைத்திருந்தோம். ஆனால் செலக்ட் கமிட்டியில், அது வேண்டாமென்றும், அரசியல் கட்சிகளின் தனிப்பட்ட நல்லெண்ணத்திற்கு விட்டுவிடலாம் என்றும் முடிவு செய்து, இப்பொழுது திருத்தப் பட்டவாறு இங்கு மசோதா இங்கு வந்தி ருக்கிறது. உண்மையாகவே எல்லா அரசியல் கட்சிகளும் தங்கள் அரசியல் முறையை, அதன் போக்கை மாற்றிக் கொள்வதுதான் நல்லது என்ற கருத்தை நான் பலமாக வலியுறுத்த விரும்பு கிறேன். சிறிது காலத்திற்கு முன்பாக சேலம் என்ற பெரிய நகரத்தில் சர்க்கார் ஒரு மாத காலம் தடை உத்தரவு போட வேண்டிய கதி ஏற்பட்டது. அந்தத் தடை உத்தரவை ஏன் போட்டார்கள் என்று நான் கேட்டறிந்தபோது உண்மையிலேயே நான் மிகவும் மன வருத்தம் அடைந்தேன் என்று இங்கு சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இரண்டு முக்கியமான அரசியல் கட்சிகள் ஒருவரை ஒருவர் தாக்கி ரொம்பவும் மோச மான முறையில் ஒருவரை ஒருவர் குடும்பத்தைக்கூட தாக்கி பரஸ்பர விரோதத்தோடு பேசிக் கொண்ட காரணத்தினல் அங்கு அதற்காக ஜில்லா மாஜிஸ்ட்ரேட் தலையிட்டு ஒரு மாதம் தடை உத்தரவு பிறப்பிக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது, என்று கேள்விப்படுகிறபோது உண்மையில் எந்த அரசியல் வாதியும் தலை குனியத்தான் வேண்டும். ஆகவே இத்தகைய நிலைமை வராமல் தடுப்பதற்காகக் கட்சித் தலைவர்கள் எல்லோரும் முன் வரவேண்டு மெனக் கேட்டுக்கொள்ளுகிறேன். பொதுவாகச் சமூக ரீதியாக இருக்கின்ற பல அவதூறான செய்திகளை வெளியிடுகின்றன. அதே

போல் அரசியல் ரீதியாகவும் செய்திகளைத் தவருக வெளியிடுகின்ற சில பத்திரிகைகள் இருக்கத்தான் செய்கின்றன. சில பத்திரி கைகள் கார்ட்டூன்கள் போடுகின்றன; அவற்றை வேண்டு மாஞலும் சகித்துக் கொள்ளலாம். ஆனல் தனிப்பட்ட முறையில் பல பத்திரிகைகள் கார்ட்டூன்களை பிரசுரிக்கின்றன . . . . . . . .

**SRI S. NAGARAJA MONIGAR**: ஸார், பாயின்ட் ஆப் ஆர்டர்; சேலம் ஜில்லாவைக் குறிப்பிட்டு கனம் அங்கத்தினர் அவர்கள் சில விஷயங்களைக் கூறினர்கள். அது எங்களைப் போன்றவர்களுக்கு மிகவும் பாதகமாக இருக்கிறது. அப்படிப் பார்த்தால் ஒவ்வொரு ஜில்லாவைப் பற்றியும் மட்ட ரகமாகவும் உயர்ந்த ரகமாகவும் நடக்கின்ற பல செய்திகளை எடுத்துக்காட்ட முடியும். ஆகவே இவ்வாறு கூறுவது சரிதான என்று கேட்க ஆசைப்படுகிறேன்.

**MR. SPEAKER**: There is no point of order. The hon. Member can continue his speech.

**SRI P. S. CHINNADURAI**: ஆகவே, இவ்வாறு அரசியல் ரீதியாக அவதூறன முறையில் தனிப்பட்டவர்களைத் தாக்குகின்ற பத்திரிகைகளின் மீது சர்க்கார் கொஞ்சம் கண்டிப்பாக இருக்க வேண்டும். கொள்கையைத் தாக்குவதாய் இருந்தாலும் பரவா யில்லை; கருத்தைத் தாக்குவதாய் இருந்தாலும் பரவாயில்லை; திட்டத்தைத் தாக்குவதாய் இருந்தாலும் பரவாயில்லை; ஆனல் தனிப்பட்ட நபர்களை, அவர்களுடைய உருவத்தை, அவர் களுடைய நிறத்தைப்பற்றிக் குறிப்பிட்டு, எழுதுவதை எல்லாம் நாம் காண்கின்ருேம். இதன் மூலம் உண்மையாகவே அரசியல் உணர்ச்சி மிகவும் தாழ்ந்துவிடுகிறது என்பதில் சந்தேகமே கிடையாது. வேறு ராஜ்யங்களில் எல்லாம் எவ்விதம் இருக் கிறதோ, அதைப்பற்றி எனக்குத் தெரியாது. அதைப்பற்றி நமக்குக் கவலையும் இல்லை. நம்முடைய ராஜ்யத்தைப் பொறுத்த மட்டில் இம்மாதிரியான முறைகளை எல்லாம் தடுப்பதற்கு அரசியல் கட்சித் தலைவர்கள் முன் வரவேண்டும் என்று மீண்டும் கேட்டுக் கொள்ளுகிறேன். பிறரைப் பழித்துக் கூறுவதின் மூல மாக, தங்களுக்குப் பெருமை தேடிக்கொள்ளலாம் என்று முயலு கின்றவர்களைத் தடுக்க எல்லா அரசியல் கட்சித் தலைவர்களும் முன் வரவேண்டும். அந்த முறையில் என்னைப் பொறுத்த வரையிலும், எனது கட்சியைப் பொறுத்த வரையிலும், இதற்கு முழு ஆதரவு தரப்படும், எந்த வகையிலும் இதற்கு ஆதரவு தரத் தயாராய் இருக்கிருேம் என்பதைத் தெரிவித்துக்கொண்டு முடித்துக் கொள்ளுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, I have nothing to reply.

MR. SPEAKER: The question is—

"That the Indian Penal Code and the Code of Criminal Procedure (Madras Amendment) Bill, 1960 (L.A. Bill No. 7 of 1960) be passed."

The motion was put and carried and the Bill was passed.